* கல்லார்க்குக் கற்பிப்போன் காசொன்றுங் கைவசமே
இல்லாரை யிந்திரன்போ லேசெய்வோன்—வல்லாய்கேள்
காமுறையூர் கையான் கமலத் திருக்கண்ணன்
மாமுறைசைச் சண்முகபூ மான். (அ)

நிமிஷகவிவேம்பத்தூர் பிச்சுபாரதிகள் நீர் உண்டவகையும் இடமும் ஒருவெண்பாவால் சொல்லுமின் என்றபோது சொல்லியது.

* கதலிக்கா யின்கறியுங் கத்தரிக்காய்க் கூட்டும்
பதமான மாவடுவும் பாங்காய்—இதமாகும்
நுண்மையொடு முண்டோம்பொன் நூலுணர்வார் வாழ்முறைசைச்
சண்முகனார் சத்திரத்திற் றன். (கூ)

சிலகவிஞர்கள் கூடி இக்காலம் பிரபுக்களில்லை அக்காலம் வடமொழிக்குக் கொடுத்தான் போஜன் தென்மொழிக்குக் கொடுத்தான் குமணனென்ற போது பாடியது.

* வனப்புறு வடசொற் கவிச்சுவை யுணர்ந்து வழங்குவான் போஜனு மென்றும், இனிப்புறு தென்சொற் கவிக்குநற் குமணன் எண்பொரு ளீகுவா னென்றும், தனித்தமிழ்ப் புலவர் வடமொழிப் புலவர் சாற்றுவர் தண்பொழின் முறைசை, வனிதைய ரணையும் சண்முக முதல்வன் மாணவை கண்டவர் மதியார். (க0)

செவ்வூர் வித்வான்கள் சிலபேர்கூடி மிடியானுழந்து இக்காலம் தாதாக்களில்லை யென்று வருந்தும் போது சொல்லியன.

* தண்டமிழ்ப் புலவீர் முறைசைமா நகரிற் சார்ந்திடு சண்முக வள்ளல், அண்டர்வண் டருவின் அம்சமாம் விரல்கொள் அய்யனை அருந்தமிழ் வைப்பைக், கண்டபோ துமது மிடிகட லேகுங் கவிமழை பொழிந்திடின் மற்றும், எண்டரு பெருமை யுரைப்பதற் கென்ன வேகமே யிடரிலை யெழுவீர். (கக)

* மற்றுமம் முதல்வன் வதியவை தனக்கோர் வண்குறி வழுத்துவன் கேண்மின், பொற்றொடி மகளி ரொருபுறம் நடிப்பர் புங்கவர் வாழ்த்தொரு புறமாம், கற்றவர் கவிக ளொருபுற மொலிக்கும் கானமே யொருபுறங் கலிக்கும், மற்றவர்க் கீயு நிதியொலி யொருபால் மன்னிடு மறிந்துசென் றிடுமே. (கஉ)

ஆகச்செய்யுள் ௩கூஅகரு.

---

## தனிச்செய்யுட்சிந்தாமணி

### முதற்பாகம் முற்றிற்று.

